11 காலுக்கு தெற்க்கு முதல் கண்ணாற்று முதல் . . . . . .
12 லம் வரை . . த்த . . . . . . .

IV

13 . . . . . . . வகலந் ரு . . . . தூடங்க . . . . . . பந் . .
14 . . . . . . ல . . . . தெதி . . . . . ாறிய . . . . .
15 . . பத்து முக்கழஞ்செ [மு] . . . . .
16 ன்டு கைக்கு நடுவெ . . .
17 ற்க்கும் ப[ணி]செய் மக . . . . . . .
18 [ா]நெல்லும் பொந்நு[ம்]
19 . . . . க்கு தெற்கு நாலாங்க

V

20 . . . . . . பாஹந்வதிக்கு மெற்கு . . . . . . .
21 பெதி மங்கலத்துக்கு நிலம் ஆக திருவாய்மொழி [கி]
22 . . . கஸைையொம் இருபதாவது முப்பதொன்பதாவ[து]
23 . . . . . . ஸூஷ்ரீ ஸ்ரீ இத்திருச் சாலகம் திரு . . . . .
24 . . . . . விசலூரடிகள் கந்தவ . . . . ந . . . . . . .
25 கெ இறையிலி செய்து குடுத்தொ[ம்] மஹாஸபெ . . . .

VI

26 . . . . . . . ழ இரண்டு அகப்பட . . . . கா . . . . .
27 செ மூக்காலெ அரைமா திருத்தொடு . . . . . . .
28 ல் மா[றி] பொன் முக்கழஞ்செ மஞ்சாடி . . . . . . .
29 இருபதி நால் எட்டெகால் மா[றி]பொன் . . . . .
30 யும் முன்றுமா கற்பக நாயகர் நாச்சியாற்கு
31 . . . . . . . . மாக பொன் கழஞ் . . . .

VII

32 . . . . . . . . . . .
33 ரு ந[ஞ]வநம் ஆக விற்றுக்குடுத்[த] . . . . .
34 . . . . வஞல் திரு உலகளந்தபடி ரு . . . . . . .
35 மஹாதேவர்க்கு ஊமாஸெஜையொம்
36 . . . . . [மு]திநெந் நித்த விநோத வளநாட்டு

## VIII

37 நாலுக்குத் திருவமுதரிசி பதக்கு நாநாழி . . . . .

38 ஸந்திக்கு திருவமுதரிசி நாநாழியும் ஆக ஸந்தி இரண்டுக்கு[த்] தி . . . .

39 நெல்லுக் குறுணி இருநாழியும் ஸூர்ய தேவர்கு ஸந்தி ஒன்று . . . . . . .

40 திருவமுதுக்கு ஸந்தி நாலுக்கும் வாழகறியமுது இரண்[டி]ஞல்

41 தயிரமுது நாழியுரிக்கும் அஜ்ஜியம் போதை . . . . . . . ஸஷ்டிக்கு தயிரமுது . . . .

42 ப்பிடிக்கும் திருவிளக்குப் பந்நிரண்டுக்கும் எண்ணை

43 உழக் குறுணியும் இவனுக்கு நாள் மூன்றும் . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | 10-ஆம் நூற்ருண்டு |
| ஊர் : | கஞ்சனூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 59 of 1931 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 10 |
| மன்னன் : | — | | |

On the right door jamp leading into the central shrine of the Agnisvara temple . . . . . Tamil - contains the words Svasti Sri Tiruneelakantan - evidently the name of the donor of the stone. The characters are of about 10th century.

அக்னீசுவரர் கோயிலின், நுழைவாயிலில் வலப்புற நிலையிலுள்ளது- தமிழ் - 'ஸ்வஸ்தி ஸ்ரீ திருநீலகண்டன்' என்றெழுதப்பட்டுள்ளது. இக் கல்லினைக் கொடையாக அளித்தவனின் பெயராக இருக்கலாம். எழுத் தமைதி 10-ஆம் நூற்றாண்டினது.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு | [2]-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு | கி. பி. 106[5] |
| ஊர் : | கஞ்சனூர் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 66 of 1931 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு | — |
| அரசு : | சோழர் | ஊர்க் கல்வெட்டு எண் | 11 |
| மன்னன் : | வீரராஜேந்திரன் | | |

On stray stones built round the central shrine of the Varadarajaperumal temple - chola - Tribhuvanchakravartin Virarajendra chola - [2]nd year - Tamil. Seems to register a gift of land, as ardhajamapuram to the temple of Rajanarayanesvaram Udaiyar. Mentions Vikrama chola chaturvedimangalam.

வரதராஜப் பெருமாள் கோயிலில் தனித்தனியாக வைத்துக் கட்டப் பட்டுள்ள கற்களில் உள்ளது. சோழர் - திரிபுவனச்சக்கரவத்திகள் வீர ராஜேந்திர சோழர் - 2-ஆம் ஆட்சியாண்டு - தமிழ்.

இராஜநாராயணேஸ்வரமுடையாருக்கு அர்த்தசாமப்புறமாக நிலம் கொடையளிக்கப்பட்டதைக் குறிப்பதாகத் தோன்றுகிறது. விக்கிரமச் சோழச் சதுர்வேதிமங்கலம் குறிப்பிடப்படுகிறது.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 27-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | — |
| ஊர் : | கஞ்சனூர் | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 67 of 1931 |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 12 |

On stray stones built into the south wall of the first prakara of the Varadarajapperumal temple-27th-Tamil. Fragmentary. Relates to a gift of land and gives the detailed boundaries of it.

வரதராஜப் பெருமாள் கோயிலின் முதற் பிரகாரத்தில் தனித்தனியாக வைத்துக் கட்டப்பட்டுள்ள கற்களிலுள்ளது. 27–ஆம் ஆண்டு–தமிழ்–சிதைந்துள்ளது. நிலக்கொடை பற்றியும், அந்நிலத்தின் எல்லைகளை விரிவாகவும் கூறும் கல்வெட்டாகும்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 5-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1123 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 617 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | விக்கிரமசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

**இடம் :** சாரபரமேஸ்வரர் (செந்நெறி உடையார்) கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவர், பட்டிகையில் உள்ளது.

**குறிப்புரை :** திருவிசலூர் பட்டப் பெருமக்கள் உள்ளிட்ட மகாசபைப் பெருமக்கள், இக் கோயிலில் எழுந்தருளியுள்ள பள்ளியறை நாச்சியாற்கு இறையிலியாக நிலம் அளித்ததைக் குறிப்பிடுகிறது. தனித்தனியாக மூன்று இடங்களில், இவ்வூர் இறைவன் செந்நெறியுடையார் பெயரில் நிலம் வாங்கியுள்ளனர். அந்த மொத்த நிலம் இரண்டரையே ஒருமாவிலீனயும், இருநூற்று நாற்பத்தெட்டுக் காசுகளுக்கு வாங்கி இறையிலியாக்கியிருக்கின்றனர். மற்றொரு நிலம், நாற்பத்தேழரைக் காசுகளுக்கு வாங்கி அளிக்கப்பட்டு இருக்கின்றது. அச்செய்தியும் இறுதியில் கூறப்பட்டுள்ளது. அனைத்து நிலங்களுக்கும் எல்லைகளும் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு வரியிலும் இறுதி சிதைந்துள்ளது.

**கல்வெட்டு :**

1 ஸ்ரீ விக்கிரம சோழ தேவற்கு யாண்டு அஞ்சாவது பிரம்மதேயம் திருவிசலூர் பட்டப்பெருமக்களுள்ளிட்ட மஹாஸபையோம் இந்நாட்டுத் திரு . . .

2 மங்கலத்து உடையார் திருச்செந்நெறி உடையார் கோயிலுக்குத் திருப்பள்ளியறை நாச்சியாற்கு திருச்செற்றத்து . . . இறையிலி [செய்து குடுத்த] நிலமாவது இ . . .

3 கு அருமொழிதேவ வாய்க்காலுக்கு தெற்கும் உலோச்சந் அனந்த நாராயணனு[ம் கி]ளிநல்லூர் சலகபத்தியனை . . .

4 தேவனும் நிலத்துக்கு மேர்க்கு ராஜராஜ வாய்க்காலுக்கு வடக்குமாக இவ்விசைந்த பெருநான்கெல்லை நி . . .

5 லம் கவணியந் பொந்மலை மாதேவ பட்டனும் பாலாசிரியந் சீதரந் மாதவனும் பாலாசிரியந் பத்தபட் . .

6 லோச்சந ஸாதவேதந் உமை உலோச்சந் ஜாதவேதந் குமரனும் சீரிளங்கோச்சாலிச் . . . .

7 ட்டாருமாக இவ்வனைவர் பக்கலும் இத்[திருச்]செந்நெறியுடையார் திருநாமத்தால் விலைகொண்டு . . . .

8 ம்மாயிருந்த் நிலம் இரண்டே ஒருபதிந்மாவரை இந்நிலம் இரண்டே ஒந்பதுமாவரையும் இந்நிலத்தை யி

9 றையிலி செய்து குடுத்த மனை நிலமாவது வடக்கிறுசேரி நத்தத்தில் கிழக்கடைய பொந்மலை மாதேவனு . . .

10 திருவரங்கநாராயணனும் மாடலந் சீகாரிமாறந் [ஆதி]யுமுள்ளிட்டார் பக்கலே இத்தேவர் திருநாமத்தால் விலைகொண்[ட] . .

11 நத்த நிலத்துக்கு கீழ்பார்க்கெல்லை புதுவூர் வதிக்கு மேற்கும் தெந்பாற்கெல்லை [க]வுணியந் பொந்மலை மாதவனு . . .

12 . . யாத திருவரங்க நாராயணனும் உள்ளிட்டார் விளைநிலத்துக்கு வடக்கும் மேல்பார்க்கெல்லை மேற்படியான் . .

13 . . . . க்கும் வடபாற்கெல்லை நெந் . . . [கணபதி] நிலத் . . சிரியத்தாழ்வார் இறையிலி நிலத்துக்கும் . . .

14 நிலத்துக்கும் தெற்கும் ஆக இவ்விசைந்த பெருநாந்கெல்லையுள் நடுவுபட்ட கொல்லை நிலம் ஒருமாவரை ஆக நி

15 லம் இரண்டரையே ஒருமா இந்நில மிரண்டரையே ஒருமாவும் ஆசந்த்ராதித்தவற் ஸாஸ்வதிகமாக இறையிலி செய்து குடு[த்து] செ

16 ந்நெறியுடையார் சீபண்டாரத்து தேவகந்மிகள் உள்ளிட்டார் கைவழி கொண்ட காசு இருநூற்று நாற்பத்தெட்டும் கைச் செ . . . . . .

17 இந் நிலமிரண்டரையே ஒரு மாவும் இறையிலி செய்து குடுத்தோம் விசலூர் ஸபையோம் இந்நம் இவ்வூர் மஹாஸ . . . . .

18 நாயநாற்கு இறையிலி செய்து குடுத்த விளைநிலமாவது புதுவூர் வதிக்குக் கிழக்கு ராஜராஜ வாய்க்காலுக்கு வடக்கு நாங் . . . .

19 குடுத்த விளைநிலத்துக்கு கீழ்பார்க்கெல்லை விசலூர் சீபத்தப் பிரியத்தாழ்வார் இறையிலி விளை நிலத்துக்கு மேற்கு . . .

20 [ராஜராஜ] வாய்காலுக்கு வடக்கும் மேல்பாக்கெல்லை . . . இந்நாச்சியாற்கு . . . செந்ந . . ப்பு . . . . ங்கள்

21 றக் கிழக்கும் வடபார்க் கெல்லை அருமொழி தேவவாய்காலுக்கு தெற்கும் ஆக இசைந்த பெருநாந்கெல் . .

22 நாமத்திலே [கி]ளிநல்லூர் சாலாபத்தியந் சேந்தபாரந் ஸ்ரீ வாஸுதேவ பட்டந் பக்கலும் பாலாசிரியந் அனந்த நாரா யணந் . . .

23 னந்த நாராயணந் விலைகொண்டு இத்தேவற்கு ஸொம்மாயிருந்த விளை நிலம் ஒந்பதிந்மாவரை இந்நி

24 . . . கு இறையிலியாக சந்த்ராதித்தவற் ஶாஶ்வதிகமாக இறையிலி செய்து இந்நாயநார் ஸ்ரீபண்டாரத்து தேவகந்மிகள் . . . .

25 . . . பத்தேழரை இக்காசு நாற்பத்தேழரையுங் கொண்டு இந் நிலம் ஒருபதிந்மாவரையும் சந்த்ராதித்தவற் ஶாஶ்வதிகமாக இறை . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 4-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1122 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 618 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | விக்கிரமசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 2 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டபத்தின் வடக்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : சாரபரமேஸ்வரர் (திருச்செந்நெறியுடையார்) கோயிலுக்கு மூன்றுமா நிலத்தினை ஏழு கழஞ்சரைப் பொன்னுக்கு வாங்கிக்கொண்டு, அதனை இறையிலி நிலமாக்கியதைக் குறிக்கிறது. இவ்வூர் மகாசபைப் பெருமக்கள் இதனை எழுதி அளித்துள்ளனர். கங்கைகொண்ட சோழ விண்ணகராழ்வார் என்ற ஒரு வைணவக் கோயிலின் இறைவன் பெயர் இதில் இடம்பெறுகின்றது.

கல்வெட்டு :

1 த்ரிபுவநச் சக்ரவத்திகள்
2 ஸ்ரீ விக்கிரம சோழ தே
3 வற்கு யாண்டு ச ஆ[வ]து [ஸ்ரீ]
4 ஹூதேயம் [விசலூர்] மஹா
5 ஸபையோம் . . . .
6 . . . . யார் திருச்செந்[நெறி]உடைய
7 ரார் ஊர்கீழிறையிலி [கு]டுத்த நில
8 வது . . . கழ் . . . . . . ல் வெள்ள
9 . . . . . ய்க்காலுக்
10 கும் மேற்குத் தெந்பாற்கெல்லை கங்
11 கைகொண்ட சோழ விண்ணகராழ்
12 வாரிறையிலி நிலத்துக்கும் . . . .
13 ஸ்ரீகரஜ்ஞந் திருவாய்குலமுடை

14 யார் நிலத்துக்கு வடக்கும் மேல்
15 பாற்கெல்லை உலோச்சந் மந்ந ந
16 த்த நிலத்துக்கு கிழக்கும் வடபாற்
17 கெல்லை ராஜராஜ வாய்க்காலுக்கு [தெ]
18 ற்கும் ஆக இசைந்த பெருநாந்கெல்லையுள்
19 நடுவுபட்ட நிலம் ஙுப இந்நி
20 ல மூன்றுமாவும் இந்நாயநாற்கு சந்த்ராதி
21 த்தவற் ஸாஸ்வதீகமாக இறையிலி செய்து
22 குடுத்[துக்கொ]ண்ட பொந் ஏழுகழஞ்சரை இப்பொ
23 ந் ஏழுகழஞ்சரையுங் கொண்டு இந்நில மூன்றுமாவும்
24 இறையிலி செய்து குடுத்தோம் இவ்விசலூர் மஹா
25 ஸபையோம்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 5-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி பி. 1123 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 619 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | விக்கிரமசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 3 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டபத்தின் வடக்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : திருவிசலூர்க் கோயில் பட்டப் பெருமக்கள் உள்ளிட்ட மகாசபையினர், திருச் செந்நெறி உடையார்க்கு இறையிலியாக நிலம் அளித்ததைக் குறிப்பிடுகிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீ திரிபுவநச்சக்கரவத்திக
2 ள் ஸ்ரீ விக்கிரம சோழ
3 தேவற்கு யாண்டு அ
4 ஞ்சாவது ப்ரஹ்மதேய
5 விசலூர்ப் பட்டப்பெரு
6 மக்கள் உள்ளிட்ட மஹாஸ
7 பையோம் திருச்செந்நெறி உடை
8 யாற்கு நாங்க[ள் இறை]யிலி செய்து கு
9 டுத்த நிலமா . . க்கு மே
10 மற்கு அருமொ . . . னுக்கு
11 வடக்கு நாங் . . யது . .
12 குடுத்த நில . . . கெல்
13 லை இந்த . . . றையி
14 லி விளைநிலத்துக்கு மே

15 ற்கு[ம்] தெந்[பாற்]கெல்லை [அருமொழி]
16 தேவவாய் . . . .
17 . . லபார் . . பத்தப்பிரியத்த .
18 . . . . . லத்துக்குக் . .
19 . . . . ஜனஞத
20 . . . . கும் ஆக இவ்வி
21 . . . யுள் நடுவு
22 பட . . ளரி உய்யவந்தாள் திரு
23 செந்நெறியுடையார் கோயிற் . .
24 ல வீதிவிடங்கந் கருவுணுயகனை
25 பிள்ளையடியாந் பேரில் குடிவி
26 லையால் முந் . . கொள்வித்து இவர்க்கு
27 மனையுட்பட விளைநிலம் அரையும்
28 பொத்தகப் படி மிகுதிக்குறைவுள்ளடங்க சந்த்ரா
29 தித்தவற் ஸாஶ்வதிகமாக இறையிலி செய்து குடு
30 த்து இப்பிள்ளையடியார் கைவழி கொண்ட கா
31 . . . . . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 47-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1117 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 620 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | -- |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | முதலாம் குலோத்துங்கன் | ஊர்க் கல்வெட்டு எண் | 4 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : வானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலத்து மகாசபையினர் செந்நெறியுடையார் கோயிலுக்கு ஒன்றே காணி அரைக்காணி நிலத்தினை ஐம்பத்தொரு காசுகளுக்கு விற்றுக் கொடுத்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டு இது. தம்மிடம் உள்ள நிலத்திற்குக் கட்டவேண்டிய வரிகளைக் கட்ட இயலாத நிலையில், அந்நிலத்தில் பணி செய்யும் மக்களில் வாங்கும் சக்தியுடையோருக்கு விற்றுவிடும்படி அரசு ஆணை பெறப்பட்ட நிலையில், இவ்விலையாவணம் எழுதப்பட்டுள்ளது.

## கல்வெட்டு

1 ஸ்ரீ ஹுநசக்ரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு சமள ஆவது இஷபநாயற்று அபரபக்ஷத்து ஷஸமி யும் புதந் கிழமையும் பெற்ற சதையத்திநாள் குலோத்து [ங்க]

2 சோழவள நாட்டுச் செற்றூற் கூற்றத்து ஸ்ரூஹூதேயம் ஸ்ரீவான வந் மா[தே]தவிச் சதுவேஉதி [ம]ங்கலத்துப் பட்டப் பெரு மக்களுள்ளிட்ட மஹாஸபையோம் இவ்வூர் திருநாராயண

3 விண்ணகராழ்வார் கோயிலிலே கூட்டங்குறைவறக் கூடியிருந்து எங்களுக்கு இறை கடிதாயுடனுள்ளது நேராகக் குடுத்து எங்களாற் தே . . றுக்கலாவது மிறுத்து . . பிந்பிறுக

4 வுடலில்லாமையினும் இந்நாளில் குடிமக்களாய் நிலை நின்று கடமையி[று]த்தார் நிலங்கள் கொள்வாற்கு விற்றுக் காசொடுக்குக வெந்று ஸ்ரீ[ஸா]தஞ் செய்தருளின திருமுகம் வந்தமை

5 [யி]ல் முந்நிந்று கடமையிற் . . . . பொன் மாடிலந் ஸ்ரீகரஜ்ஞ பட்டனும் க[வு]ணியந் தண்ணுனூர் நம்பிபட்டனும் உள் ளிட்டாரும் முந்பே ஸ . . ப்பொ . . நிலமுமாக

6 இந்நா . . . . ராஜஸு ந்தரிச் சதுவேதி மங்கலத்து உடை யார் திருச்செந்நெறியுடையாற்கு விற்றுக்குடுத்த நிலமாவது இவ்நாலாங்கண்டத்து இந்நிலத்துக்குக்

7 கீழ்பார்க்கெல்லை . . திருச் . . . டத்தாழ்வாருதான இறையிலி நிலத் . . . நிலத்துக்கும் ஸ்ரீ கரஜ்ஞபட் . . த்துக்கும் பட் டைப் பிடாரி கோயிலி

8 நிந்றும் வடக்கு நோக்கிப் போந்த வொழுக்கைக்கு மேற்கும் தெந்பார்க்கெ[ல்லை] . . . க்கும் . . . திருப்பனங்காடுடைய மஹா . . நிறையிலி நிலத்துக்கு வடக்கும் மேல்பார்

9 க் கெல்லை மழவசேரி வாய்க்காலுக்குக் கிழக்கும் வடபார்க் கெல்லை குலோத்துங்க சோழ நல்லூருக்கு நீர்ப்பாய்க்கா லின் வாய்க்காலுக்கு . . ற்கும் ஆக இவ்விசைந்த பெரு நாந்கெல்லையு

10 ள் நடுவுபட்டு எங்களுக்கு ஸொம்மாயிருந்த நிலம் ஒந்றே காணியரைக்காணியும் இந்நாயனார் திருநாமத்தே விற்றுக் குடுத்து இந்நாய . . கோயிலில் ஸ்ரீமாஹேஸ்வரக் கண்காணி வீதி வி

11 டங்கந் கருவுணயகனுந பிள்ளையடியாரும் தேவகந்மிகளும் கைவழி குடி விலையாக ஸம்மதித்துக்கொண்டு அந்றுடு நற்காசு ரு[ மக] இக்காசு . . . சு . . ஆவணக்களியே காட் டேற்றி கைச்

12 செலவறக் கொண்டு இந்நிலம் விற்று விலையாவணஞ் செய்து குடுத்தோம் இத்திருச்செந்நெறியுடைய மஹாதேவற்கு அந்தாஷித்தவற் [வாந]வந் [மா]தேவிச் சதுவேதி மங் கலத்துப் பட்ட

13 ப் பெருமக்களுள்ளிட்ட ஊஹாஸபையோம் இந்நிலமொந்றே காணியரைக் காணிக்கும் நாங்களிறையிலி செய்து குடுத்து இந்நாய[னர்]* தே[தவ]கந்மிகள் கைவழிக் கைக்கொண்ட காசு

14 ருமக இக்காசு ஐம்பத்தொந்று காட்டேற்றிக் கைச் செலவறக் கொண்டு [இத்]திருச்செந்நெறியுடைய மஹாதேவற்கு அந்தா தித்த . . . . இந்நிலம் ஒந்றே காணியரைக்கா . . .

15 [ணி]யும் இறையிலி செய்து குடுத்து இக்காசு ஐம்பத்தொந்றுங் கொண்டோம் இவ்வூர் . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 9-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1127 |
| ஊர் : | திருச்சேறை | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 620 of 1909* |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | விக்கிரமசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 5 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறி உடையார்) கோயில் மகாமண்டபத்து வடக்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : வானவன் மாதேவிச் சதுர்வேதிமங்கலத்து நம்பிகள் உள்ளிட்ட மகாசபையினர் விளைநிலம் மூன்றுமாக்காணி அரைக்காணியினையும், கொல்லைநிலம் ஒருமா முக்காணியினையும், செந்நெறியுடையார் கோயிலுக்கு, பதிந்மூன்றே முக்கால் காசுகளுக்கு விற்று விலையோலை எழுதிக்கொடுத்துள்ளதை இக்கல்வெட்டில்காண்கிறோம்.

கல்வெட்டு :

1 ஸ்ரீ திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ விக்கிரமசோழ தேவற்கு [யா]ண்டு ஒந்பதாவது ஸிங்[க]நாயற்று அபர பக்ஷத்து பஞ்சமி[யு]ந் திங்கட்கிழமையும் பெற்ற . ஸ்வதி நாள் குலோத்துங்க சோழவளநாட்டு திருச்செற்றுற் கூ

2 ற்றத்து ப்ரஹ்மதேயம் வானவன் மாதேவிச் சதுவேதி[தி ம]ங்கலத்து நம்பிமாருள்ளிட்ட மஹாஸபைப் பெருங்குறிப் பெருமக்களோம் நிலவிலைய[ாவ]ண மிந்நாட்டு ப்ரஹ்மதேயம் ராஜாதித்தச் ச[துர்வேதி மங்க]

3 லத்து உடையார் திருச்செந்நெறியுடைய மஹாதேவர் கோயிலில் ஸ்ரீ மாஹேஸ்வரக் கண்காணிப்பிள்ளையடியாற்கும் தேவகந்மிகளுக்கும் நாங்கள் விற்றுக் குடுத்த நிலமாவது எங்களூர் . .

---

* 620 of 1909-இல் இரு கல்வெட்டுக்களின் குறிப்புக்கள் ஒன்றாக உள்ளன. அவை இங்குத் தனித்தனிக் கல்வெட்டுக்களாக (ஊ. க. எண். 4, 5)ப் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

4 த்து விற்றுக் குடுத்த நிலத்துக்கு கீழ்பார்க்கெ[ல்]லை பட்டைப் பிடாரி நங்கை கோயிலிநிந்றும் வடக்கு நோக்கிப் போகிற ஊரொழுக்கைக்கு மேற்கும் தெந்பார்க்கெல்லை இத்திரு . .

5 ர் தேவர் இறையிலி நிலத்துக்கு வடக்கும் மேபார்க்கெல்லை இந் நாயநாரிறையிலி விளைநிலத்துக்குக் கிழக்கும் [வட]பார்க் கெல்லை குலோத்துங்க சோழநல்லூர்க்கு நீர் பாய்க்க . . .

6 இவ்விசைந்த பெருநாந்கெல்லையுள் நடு[வு]பட்ட இப்பரிவத்தனை யால் ஸபையோம் . . யிருந்த விளை . . . ந்று மாக்காணி யரைக்காணி [இ]ந்நிலம் மாக்காணியரைக்காணி . . . இதந் தெ . . .

7 விலையாவணஞ் செய்து குடுத்தோம் இவ்வானவந் மாதேவிச் சதுவேதிமங்கலத்து நம்பிமாருள்ளிட்ட மஹாஸபையோம் [பெ]ருங்குறிப் பெருமக்களோம் இவ்விளைநிலம் மூந்றுமாக்

8 காணியரைக்காணியும் கொல்லை நிலமொருமாமுக்காணியும் இத் திருச்செந்நெறியுடையார் திருநாமத்திலே இறையிலி செய்து குடுத்து வாநவந் மாதேவிச் சதுவேதி மங்கலத்து நம்பிமா ருள்ளி

9 ட்ட மஹாஸபைப் பெருங்குறிப் பெருமக்களோம் இவ்விளைநிலம் மூந்று மாக்காணியரைக்காணியும் கொல்லை நிலமொருமா முக்காணியும் இத்திருச்செந்நெறியுடையார் திருநாமத்தில் இறையிலி செய்து குடுத்து இவ்வானவன் மாதேவிச்

10 சதுவேதி மங்கலத்து நம்பிமாருள்ளிட்ட மஹாஸபைப் பெருங் குறி மக்களோம் இத்தேவர் தேவகன்மிகளும் ஸ்ரீ மாஹேஸ்வர கண்காணிப்பிள்ளையடியாருங் கைவழிகொண்ட காசு ஒடுவ இக்காசு பதிந்மூந்றேகாலும் [ஆ]வணக்களியே காட்டேற்றிக் கைச்செலவறக்

11 கொண்டு சந்த்ராதித்தவற் ஸர்வதிகமாக இறையிலி செய்து குடுத் தோம் நம்பிப் பெருமக்களுள்ளிட்ட மஹாஸபையோம்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 11 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 6 |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | — | | |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : கல்வெட்டின் தொடக்கம் இல்லை. வானவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலத்து சபையினர் எழுதிக் கொடுத்த நிலைவிலையாவணம் இது. இரண்டே கால் காசுகளுக்கு விற்றுள்ளனர். (இது வரி கட்ட இயலாத நிலையில் எழுதிக்கொடுத்த நிலைவிலையாவணம் போலத் தோன்றுகிறது.)

**கல்வெட்டு**

1 . . . . . .
2 பெற்ற தைய்த் திருநாள் . . . . லத்து . .
3 ஸபையோம் இவ்வூர் திரு . . . நாராயண
4 . . . . காலாவது மிறுத்து . . . . பிந்பிநுக்கு . .
5 தஞ் செய்தருளின திருமுகம் . . . . வந்தமை . . . .
6 ஷ . . . ப்பொந் . . . . . . நிலமுமாக
7 நாலாங் கண்டத்து இந்நிலத்துக்கு . . . .
8 . . . . த்துக்கும் பட்டை பிடாரி கோயிலி
9 றையிலி நிலத்துக்கு வடக்கும் மேல்பார் . . . .
10 ம் ஆக இவ்விசைந்த பெருநாந்கெல்லையு . . .
11 கோயிலில் ஸ்ரீமாஹேஸ்வரக் கண்காணி வீதிவி . . .
12 சும் ஆவணக்களியே காட்டேற்றி கை . . .

13 நவன் மாதேவிச் சதுர்வேதி மங்கலத்துப் பட்ட . . .

14 ர் தேவகந்மிகள் கைவழி கொண்ட காசு

15 வதானம் இந்நிலம் ஒன்றே காணியரைக் காணி . . . .

16 யேதயே . . . . ருந்த புந்செய் நில . . .

17 ணியாக விற்றுக் கொள்வதான எம்மிலிசைந்த விலைப்பொருள் . . . . .

18 ஒருமா முக்காணியும் ஆக விளை நிலமுங் கொல்லையுமான நிலங் காலே யரைக்காணியும் இத்திருச்செந்நெறி மஹாதேவர் திருநாமத்திலெ கா . . . . .

19 ப் பொருளந்றுடு நற்காசு உப இக்காசு இரண்டே காலும் ஆவணக்களியே காட்டேற்றி கைச் செலவறக் கொண்டு இந்நாயநார் . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 5-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1123 |
| ஊர் : | திருச்சேறை | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 621 of 1909 |
| எழுத்து : | தமிழ் | | |
| அரசு : | சோழர் | முன் பதிப்பு : | — |
| மன்னன் : | விக்கிரமசோழன் | ஊர்க் கல்வெட்டு எண் | 7 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டப மேற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : இராஜசுந்தரிச் சதுர்வேதி மங்கலத்துப் பட்டப்பெருமக்கள் உள்ளிட்ட மகாசபையினர், அனைத்து நிலத்திற்கும் நிலவரி கட்ட இயலாது போக, தம்மால் கட்ட முடிந்த நிலங்கள் தவிர பிறவற்றைச் செந்நெறியுடையார் கோயிலுக்கு விற்றுக் கொடுத்ததை இக்கல்வெட்டுச் சுட்டுகிறது.

## கல்வெட்டு

1 . . . சகூவத்திகள் ஸ்ரீ விக்கிர[சோழ தேவ]ற்கு யாண்டு ரு ஆவது மிதுந நாயற்று அபரபக்ஷத்து

2 . . யும் வியாழக்கிழ[மையும்] பெற்[ற] உரோசனி நாள் குலோத்துங்க சோழ வளநாட்டு செற்றூர் கூற்றத் . . . .

3 தேயமாந ஸ்ரீ ராஜஸுந்தரிச் [சது]வேதி மங்கலத்துப் பட்டப் பெருமக்களுள்ளிட்ட மஹாஸபையோம் . . .

4 ற்றுவரம்பலத்தேய் . . . து கூட்டங் குறைவறக் கூடியிருந்து இயாண்டு நம்மூரொட்டி . .

5 போநமையில் . . . . டுமொ . . . வெல்லாமிறு . . . எங்கு காற் தேடலாவன . .

6 . . மரங்க . . . நாங்கள் குடிவிலை கொள்வாரின்மையாலும் . . . . . . . சிறிது நிலத்து . . . .

7 . . ங் குடுத்து கடமை இறுப்போமெந்று இப்பட்டப் பெரு [மக்க]ளுள்ளிட்ட மஹாஸபையோம்

8 . . . . இறையிலி [செய்]து குடுத்த பரிசாவது இவ்வூ[ர்] திருச் செந்நெறியுடைய மஹாதேவர் திருப்பள்ளியறையான . .

9 ந் திருச்செந்நெறிப் புறமாகவும் திருநந்தவனங்களாகவும் . . . . முஞ்சேரியு[டை]யார் கோளரி உலகுய . . . .

10 ன் வாணுதி . . மிகள் பக்கல் . . . உலகுய்யவந்த விளாக மெந்நும் பேரால் நாங்களிறை . . .

11 து குடுத்து . . . வதிக்குக் கிழக்கு ராஜேந்த்ரசோழ வாய்க் காலுக்குத் தெற்கு மூந்ரு[ங்கண்]

12 ணுற்று இரண்டாஞ் சதிரத்து நாங்கள் இறையிலி செய்து குடுக்கிற விளைநிலத்துக்கும் புந்செய் நிலத்து . .

13 . . நிலத்துக்கும் கீழ்பாற்கெல்லை [இ]ந்நாயனுர் நாற்பத் தெண்ணுயிரவந் மடப்புற இறையிலி விளை நி . .

14 . . செய் நிலத்துக்கும் மேற்கும் மேற்பாற்கெல்லை கண்ணுற் றுக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை சதிரத்துக்கு . .

15 வடபாற்கெல்லை கண்ணுற்றுக்கு தெற்கும் ஆக இவ்விசைந்த பெருநாந் கெல்லையுள் நடுவுபட்டு இவ்வூரில்

16 . . நாராயண சீராமபட்டனும் க . . ளயந் ஸ்ரீ . . .

17 . . . லை நிலம் . . . . நிலம் க . . . . . க்கும் குடி . . யாக இக்கோயிலில்

18 . . . . வஹ . . ம் ஸஹையா . . க்கல் . . லை . . .

19 . . யும் புந்செய்நிலம் [ஊ]வரூவஙூழவதுகு வஙம நீர்நிலை நிலம் யெு . . ஆநிலவுறுவரூ . . .

20 ஆகக் கொல்லையுட்பட நிலம்கவகூஙகீழ்ரு . . இந்நிலம் . . ஒந்றே யொந்பதுமா முந்திரிகைக் கீழரையே மாகாணி

21 விலைகொண்டு குடிவிலையிட்ட காசு உமசுவஙுச இக்காசுமிரு பத்து நாலேயறுமாவரையும் காட்டேற்றிக் கைச் செல . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 5-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1075 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | முதற்குலோத்துங்கன் | ஊர்க் கல்வெட்டு எண் | 8 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறி உடையார்) கோயில் மகாமண்டபம் தெற்கில் மேற்குப்புற வளைவில் உள்ளது.

குறிப்புரை : இராஜசுந்தரிச் சதுர்வேதி மங்கலத்து மகாசபைப் பெருமக்கள், செந்நெறி யுடையார் சித்திரை மாதம் சோதித் திருநாளன்று விழா எழுந்தருளவும், ஆற்றில் சென்று தீர்த்தமாடி அருளுவதற்குமெனக் கொடுத்த நிலக்கொடையினை இக் கல்வெட்டு மூலம் அறிகிறோம்.

கல்வெட்டு :

1 திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ரு ஆவது இஷப நாய[ற்றுவி]

2 யாழக் கிழமையும் பெற்ற உத்ரக[சீரிஷ]த்திநாள் குலோத்துங்க சோழ வளநா . .

3 யம் ராஜஸுந்தரிச் சதுவேதி மங்[கலத்]துப் ப[ட்டப்] பெரு மக்களுள்ளிட்ட மஹா . .

4 நெறியுடையாற்கு சித்தி[ை]ரச் சோதித் திருநாளெழுந்தருளி . . . . ராடணப்பேராற்றி . . .

5 . . . ருளி . . . த்த . . . ளுகைக்குத்தொ . . ற்றாற்று . . னெந்நா

6 ஸாஹஸ்ரிகமாகக் காசு கொண் . . றையிலியாகக் குடுத்த . . .

7 த பிராந் வாய்க்காலுக்குத் தெற்கு முதற் கண்டத்து மிரண் டாங் கண்டத்தும் நாங்[க]ளிறையிலி . . . .

8 ற்கெல்லைச் சதிரத்துக்கு மேற்கும் தெந்பாற்கெல்லை வேயந் நாராயணந் சங்கர நாராயணபட்டந் . . . .

9 கெல்லை சந்திரந் திருவரங்கதேவநுந் த[ம்]பியுமுள்ளிட்டார் நிலத்துக்குக் கிழக்கும் வடபாற்கெல் . .

10 கும் ஆக இவ்விசைந்த பெருநாந் கெல்லையுள் நடுவுபட்டு வேயந்திருச் . . நாராயண . .

11 திருச் செந்நெறியுடையார் சித்திரைச் சோதித் திருநாள் தீத்தம் ஞஸாதித்தருள உடையார்

12 . . . . ளியிருக்கத் திருக் . . . .

13 . . . . ஹுமா . . த்ரா . .

14 றையிலியாகத் திருக்கைம்மலரில் நீர்வார்த்து இறையிலி செய்து குடுத் . . . .

15 . . ட்டப் பெருமக்களுள்ளிட்ட மஹாஸபையோம்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 9 |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | — | | |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறி உடையார்) கோயில் மகாமண்டபத் தெற்குப் புறத்தில் உள்ளது.

குறிப்புரை : ராஜசுந்தரிச் சதுர்வேதி மங்கலத்து மகாசபையினர், செந்நெறியுடையார் கோயிலில் உள்ள உமாமகேஸ்வரருக்கு அமுதுபடி உள்ளிட்ட நிவந்தங்களுக்கு நிலம் அளித்ததைக் குறிக்கிறது. திரிபுவனமாதேவி வதி, ராஜராஜ வாய்க்கால் ஆகியவையும் குறிப்பிடப்படுகின்றன. திருமுத்தீசுரமுடையார் என்ற இறைவன் பெயரும் இக்கல்வெட்டில் குறிக்கப்படுகிறது. கல்வெட்டு முழுவதும் கிடைக்கவில்லை.

**கல்வெட்டு :**

1 த்ரிபுவநச் சக்ரவத்திகள் ஸ்ரீ . . . . .

2 . . . . நான் நூற்றெருபத்து மூன்றினுல் க[ற்கட]க நாயற்று அபர பக்ஷத்து நவமியும் வெள் . .

3 குலோத்துங்க சோழ வளநாட்டுச் செற்றூர்க் கூற்றத்துப் ப்ரஹ்ம தேயம் ராஜஸுந்தரி சதுர்வேதி . . . .

4 ருள்ளிட்ட மஹாஸபையோம் இவ்வூர் திரு[மு]த்தீஸ்வரமுடையார் கோயிலில் திரு . . .

5 மகந் . . . டி இவ்வாண்டு இவ்வூரில் போகங்கள் . . .

6 . . . ற்ற . . . . ழையில் ஸபை . . .

7 . . . . . . . . . . . .

8 நெறியுடையார் கோயிலில் உமாமஹேஸ்வர தேவற்கு அமுதுபடி ப . . . றமாக நாங்கள் ஸ . . .

9 டுத்த நிலமாவது இவ்வூர்த் திரிபுவனதேவி வதிக்குக் கிழக்கு ராஜராஜ வாய்க்காலுக்கு வட . . .

10 ங்கள் இறையிலி செய்து குடுக்கிற நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை திருமுத்தீஸ்ரமுடையம . . . . .

11 மேற்கும் தெந்பாற்கெல்லை இவ்வா[ய்க்]காலுக்கு வடக்கும் மேல் பாற்கெல்லை இத்திருச்

12 . . லத்துக்குக் கிழக்கும் வடபாற்கெல்லை நக்க . . . பாடியாம் நவ . . . ண்டாழ்ஞ்சே . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 7-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி பி. 1223 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 615 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | [மூன்றும் ராஜராஜன்] | ஊர்க் கல்வெட்டு எண் | 10 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டபத்தின் தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : சாரபரமேசுவரர் [செந்நெறியுடையார்] கோயிலில் காணியுடைய சிவபிராமணர்களிடம், இவ்வூரில் இருக்கும் வெள்ளாளன் நித்தியகல்லியாணன் மண்டையான் திருவிளக்கு நம்பி என்பான், ஒரு நொந்தாவிளக்கு எரிக்க 20 காசு கொடுத்துள்ளான். அக்காசினுல் வரும் வட்டி கொண்டு இவ்விளக்கு எரிக்க ஒத்துக்கொண்டு எழுதிக் கொடுத்த ஆவணம் இது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபுவன சக்கரவத்திகள் [ராஜரா]ஜ [தே]வற்கு யாண்டு எ ஆவது திருச்சேறை திருச்செந்நெறி உடையார் கோயில் காணி உடைய சி

2 வப்ராஹ்மணரில் காமகா[ய]ன் ஜபங்கொண்டான் [குனிக்]கும் பிரானும் மாடிலன் அம்பலங் கோயில் கொண்டான் சேறை நாயகனும் ஆத்திரை

3 ரயன் பட்டன் கருவுணயனும் காசியபன் திருவையாறுடையான் மாபறமனும் உள்ளிட்ட இவ்வனைவோம் இவ்வூர் இருக்கும் வெள்ளா

4 ளன் நித்த[கல்லியாணன் மண்டையாந் திருவிள]க்கு நம்பிக்கு நாங்கள் உபையத்திட்டுக் குடுத்த பரிசாவது இவன் பக்கல் இக்கோயிலிலெந்று நெய் நித்தம் உழக்கு ெ[ந]

5 ய்யால் ஆசன . . . . நொந்தா விளக்கு ஒன்று எரிக்கக்கடவோ

மாக கொண்ட காசு உம் இக்காசு இருபதுக்கும் பொன் . .
ண்டு பொலியூட்டாக எரிக்கக்கடவோமாகவும் இக்கோயி
6 லில் காணி எங்கள் பக்கல் விலையாலும் ஒற்றியாலும் அடை
கொண்டும் அபாபத்தாலும் பெற்றுடையராய் படி கடந்து
புக்காரே எரிக்க கடவர்களாகவும் இப்ப
7 [டி] இக்கோயிலிலே கல்வெட்டிக்கொள்ளக் கடவநாக இசைந்து
தீட்டுக் குடுத்தோம் இந்நித்தகல்லியாணன் மண்டையாந்
திருவிளக்கு நம்பிக்கு
8 இக்குனிக்கும்பிரான் உள்ளிட்ட இவ்வனைவோம் இது ப[ன்]
மாஹேஸ்வர ரக்ஷை

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 11 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டபத் தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : கல்வெட்டின் இறுதிப்பகுதி மட்டுமே உள்ளது. தக்ஷிணயனம், உத்திராயனம் ஆகிய இரு அயனங்களும், சித்திரை விஷு, ஐப்பசி விஷு ஆகிய இரு விஷுக் களும், [சூரிய சந்திர] கிரணங்களும் ஆகிய நாட்களில் இறைவன் அமுது செய் தருள நிலம் கொடையளித்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 . . . . . . .

2 இக்குழியால் நிலம் காணி அரைக்காணிக் கீழரை இன்நிலம் வாசியுட்படப் பதிங்க . . . . . .

3 மால் வந்த நெல்லிலே திரு . . . . க்கு முக்கல நெற்போக்கி அல்லாத நெல்லுக்கு அயனம் இரண்டும் விஷு இரண்டும்

4 . . . . ந . . . . கிரணங்களுக்கும் ஒன்றுக்கரிசி குறுணி நாநா . . . . ஆக உடையாரை அமுது செய்விப்பது இது பன் மாயே[சுர ரக்ஷை].

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 12 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறி உடையார்) கோயில் மகாமண்டபத் தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : கல்வெட்டின் தொடக்கம் இல்லை. இரவில் சந்திவிளக்கு ஒன்று எரிக்க அளித்த நிலக்கொடையைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 . . . . . .
2 விட்ட விளைநிலம் அரைக்கா
3 ணியாலும் . . . . [மறுநட்ட பொ
4 த்தாலுள்ள] நெல்லு உடையார்
5 [ப]ண்டாரத்தே புக்கு நாள் ஒன்று
6 க்கு இரவை ஸந்திக்கு ஸந்திவிள
7 க்காக எரிக்கும் ஸந்திவிளக்கு ஒன்
8 [று]க்கு உடையார் ஸ்ரீபண்டாரத்தே [ச]
9 ந்திராதித்தவற் . . . . .
10 . . . . . எரிக்கக் கடவத . .
11 . . . . தத்து இதுபன்
12 மாஹேஸ்வர இரக்ஷை :-

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 11, 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 13 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார்) கோயில்-மகாமண்டபத்தின் தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : இது கல்வெட்டின் இறுதிப் பகுதி. நிலம் கொண்டு இரவு சந்திவிளக்கு எரிக்கச் செய்த ஏற்பாட்டைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 . . . . . . . .

2 தாத்தி கூடின நிலம் . . . . பிந்பு கல்லிந நிலம் முந்திரிகைக் கீழரை ஆக நிலங்காணி கீழரையு

3 . . . முந்திரிகை ஆக நிலம் அ . . . கூட்டிக்கொண்டு சந்தி ராதித்த வரை இரவை சந்திக்கு ஒரு . . . . .

4 ரைக்காணி முந்திரிகை . . . . எரிக்கப்பண்ணுவது இது பந்மாஹேஸ்வரர் ரக்ஷை

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 11-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1227 |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 616 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | மூன்றாம் ராஜராஜன் | ஊர்க் கல்வெட்டு எண் | 14 |

இடம் : சாரபரமேஸ்வரர் (செந்நெறியுடையார் கோயில்) மகாமண்டபத் தெற்குப்புறக் குமுதத்தில் உள்ளது.

குறிப்புரை : திருச்செந்நெறியுடையார் கோயில் சிவபிராமணர்கள் வசம் திருநொந்தா விளக்கு ஒன்று எரிக்க நெய் அளக்கும் பொருட்டு, 25 காசுகளை அளித்ததை இக்கல்வெட்டு காட்டுகிறது. கொடுத்தவரின் பெயருள்ள இடம் முழுவதுமாகச் சிதைந்து விட்டது.

**கல்வெட்டு**

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீரரஜராஜ தேவற்கு யாண்டு [ம]க* ஆவது திருச்சேறையான இரா . . . ந்த . . . . . கலத்து உடையார் திருச்செந்நெறி உ[டையார் கோயில் சிவ]ப்ராஹ்மணரில் காமகாயன் [ஜெய]ங்[கொ]ண் [டான்] குநிக்கும் பிராநாந நாற்பத்தெணாயிரபட்டனும் ஆத்திரயந் சிவபு[ர] . . . ஆழ்வ[ா]நாந அணுக்கநம்பியும் [ஆ]ரிதந் பெரியாந் பொந்நம்பலக்கூத் . . . ம்கெதமநி . .

2 த்திரையந் பட்டந் கருவுணயகபட்டநும் இவ்வனைவோம் ஜயங்கொண்ட சோழ மண்டலத்து தாமற் கோட் . . . நாட்டுக்கரிவேட்டில் கொற்றமாந . . . வாந . . . லநித்த . . படி நறுநெய் நித . . . ழக்கு நெய்யால் திருநுந்தா விளக்கு ஒன்றெரிக்கக்கடவோமாக நாங்கள் கொண்ட காசு உயரு இருபத்தஞ்சும் இக்காசு இருபத்தைஞ்சு ஆசந்திரகால முதல் நிற்க . . சைக்கு இரு . . நுந்தா விளக்குஎரிக் . . .

3 வில் எங்[கள்] பக்கல் இக்காணி விலை கொண் . . . கொண்டான் ம . . . . ம் பெற்ற . . ம்மபாவ . . . . . . யராம அடைகொண்ட . . எறு விலையாலும் ஊைை விலையாலும் ஊஷேமூர விலையாலும் உள்ளிட்ட பேறுகளால் பெற்றுடையார் . . . . . . படி கடந்து புக்கார் எரிக்ககடவதாகவும் இப்படிக்கு இக்[கோயி]லிலே க[ல்]வெட்டிக் கொள்ளப்பெறுவாராக இசை . . . கோட்டை . . . . வதியாழ்வானுக்கு இவ் . . . . ஏழாவது . . . . . .

* இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கையில் ஆட்சியாண்டு ஒன்று என்று குறிக்கப்பட்டுள்ளது.

த. நா. தொ. ஆய்வுத்துறை    தொடர் எண் : 118 / 1979

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 16 17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | கிரந்தம் | ஊர்க் கல்வெட்டு எண் | 15 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : சாரநாதப் பெருமாள் கோயில்-கருவறையின் மேற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : இக்கோயிலைக் கட்டுவதில் பங்குகொண்டவரின் பெயராக இருக்கலாம்.

கல்வெட்டு :

1 வாசுயங்கார ஸதாலேவை

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு | — |
| எழுத்து : | கிரந்தம் | ஊர்க் கல்வெட்டு எண் | 16 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : ஸ்ரீசாரநாதப் பெருமாள் கோயில்-கருவறை தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : ரெத்னய்யங்காரின் தன்மம் என்று குறிக்கப்படுகிறது.

கல்வெட்டு :

1 ரெத்நய்யங்கார் ஸதாஸேவை

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி.16, 17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழும், கிரந்தமும் | ஊர்க் கல்வெட்டு எண் | 17 |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | | |

இடம் : சாரநாதர் கோயில்-கருவறையின் தெற்குச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : வள்ளல் அய்யங்காரும், அவருடைய மனைவியும் தன்மஞ் செய்தவராகக் குறிக்கப் படுகின்றனர்.

## கல்வெட்டு

1 வள்ளலெய்யங்கார் ஸஹா

2 ஸேவை அவருடைய

3 ஸ்ரீஅப்பையாயி ஸஹா ஸேவை

த. நா. தொ. ஆய்வுத்துறை தொடர் எண் : 121 / 1979

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | சகம் 1566<br>கி.பி. 1644 |
| ஊர் : | திருச்சேறை | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 614 of 1909 |
| எழுத்து : | தமிழும், கிரந்தமும் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 18 |

இடம் : ஸ்ரீசாரநாதர் கோயில்-கருவறை தெற்குக் குமுதத்தில் உள்ளது.

குறிப்புரை : விஜயராகவ பூபாலனின் நன்மைக்காக, கோவிந்ததாசன் என்பவர், நன்செய், புன்செய் நிலங்களைத் தானமாகக் கொடுத்ததை இக்கல்வெட்டு குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்ரீ ஸாரநாதாய நம: ஸ்வஸ்தி ஸ்ரீ ஸகாப்தம் ௲௫௱௬௰௬ இதின்
செல்லா நின்ற தாருண வருஷம் கார்த்திகை பு ௰௨ சநி
ரோஹிணி நாள் ஸ்ரீ ஸாரநாத ஸ்வாமிக்கு ஸம்மி பீதாம்பரமும்
சாத்திவிச்சு ஏகாந்த திருமஞ்சனத்துக்கும் சாந்து ச[ரிபா]க்-
கும் மழவராயஸந்நிதிக்கும் விஜயராகவ பூபாலன் புண்
ணியமாக கோவிந்த தாஸன் கெங்காதர நல்லூரில் பொலி
யூட்டாக ஸர்வமாந்யத்த புஞ்சை நிலம் மூன்றே எட்டுமா
ஆழ்வார் ஸந்நிதிக்கு ஸர்வமாந்யத்த நஞ்சை நிலம் அரை ஆக நிலம்-

2 மூன்றே முக்காலே மூன்றுமாவும் சுகந்தம் அப்பங்கார் பாரிசம்-
இக்கட்டளையிட்டு தாராபூர்வ உதகமாக தர்மஸாஸநம் பண்ணி
ஸர்வமாந்யதற்படியினாலே ஆசந்த்ரார்க்கமாக ஸ்வாமியார் புத்ர
பௌத்ர பரம்பரையாக ஸாரநாத ஸ்வாமித்தெ கைங்கர்யம்
பண்ணிக்கொண்டு சுகத்திலேயிருக்கவும் இந்த தர்மத்துக்கு
ஆராகிலும் விகாதம் பண்ணினால் கெங்கைக் கரையிலே காராம்
பசுவைக் கொன்ற தோஷத்திலே போகவும்.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 16, 17-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 19 |

இடம் : சாரநாதர் கோயில்-முன்மண்டபத்தூணில் உருவச்சிலையின் கீழ் உள்ளது.

குறிப்புரை : முன்மண்டபத்தைக் கட்டுவித்தவராக இருக்கலாம்.

கல்வெட்டு

1 நல்ல வாணன்

2 சதா சேர்வை

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 10-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 10-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| எழுத்து : | தமிழ் | ஊர்க் கல்வெட்டு எண் | 20 |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | பரகேசரி | | |

இடம் : ஸ்ரீசாரநாதப் பெருமாள் கோயில்-கருவறை முன்புறம் வாயிற்படி முன்பு தளத்தில் பாவப்பட்டுள்ள கல்.

குறிப்புரை : கல்வெட்டின் ஒருபகுதியே கிடைத்துள்ளது. தஞ்சாவூர் அரண்மனை வேளத்தில் பணிபுரியும் பாளூரன் பொற்றும[ரை] என்பாள், இடையன் வெண்ணி வண்ணக்கன் மூலம், திருமுத்திருக்கோயில்* பெருமாளுக்கு விளக்கொன்று எரிக்க [ஆடு?] தொண்ணூறு அளித்ததைக் குறிப்பதாகத் தெரிகிறது.

கல்வெட்டு

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி பந்மற்க்கு யாண்டு [பத்]தாவ . . .

2 தானம் செற்றார் திருமுத்திருக்கோயில் பெருமாளுக்கு தஞ்சாவூ . . . .

3 கிழானடிகள் வேளத்துப் பெண்டாட்டி பாளூரன் பொற்றும . .

4 க்கொன்றுக்கும் எண்ணுழி நாராசம் வழுவாவுழக்கினல் நி . . .

5 தெற்கு சந்த்ராதித்யவல் இடையன் வெண்ணி வண்ணக்கன் வழி . . .

6 தொண்ணூறு இது பந்ம[ா]*ஹேஸ்வர ரக்ஷை||—

---

* இக்கோயில் இறைவனின் பழைய பெயர் திருமுத்திருக்கோயில் பெருமாள் போலும். இவ்வூர்க் கல்வெட்டு எண். 21-ஐப் பார்க்க.

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 10-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 10-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 612 of 1909 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | பரகேசரிவர்மன் | ஊர்க் கல்வெட்டு எண் | 21 |

இடம் : சாரநாதர் கோயில்-குளக்கரையில் நாலுகால் மண்டபப் படியில் உள்ளது.

குறிப்புரை : கல்வெட்டின் ஒருபகுதியே கிடைத்துள்ளது. பொய்யில் கூற்றத்துக் கீரமங்கலத்துக் கீரமங்கலமுடையான் என்பான், இடையன் வண்ணக்கன், இடையன் சாத்தன் காடன் ஆகிய இருவர் வழி விளக்கொன்று எரிக்கத் தானம் அளித்ததைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோப்பரகேசரி பன்மற்கு யாண்டு பத்த[ா]

2 வது செற்றூர்க் கூற்றத்து தேவதானம் செற்றூர் திருமுத்திருக்

. . .

3 பொய்யில் கூற்றத்து கீரமங்கலத்து கீரமங்கலமுடையான் ந . . .

4 க்கி வைத்த நொந்தா விளக்கொன்றுக்கு எண்ணாழி நாராசம் வழு . . .

5 கு நெய்யட்டுவதற்கு சஹாதித்தவற் இடையன் வண்ணக்கன் ப . . . .

6 தனன் சாத்தன் காடனும் இவ்விருவர் வழி விட்ட சாவா மூவாப்பே . . .

7 பன்மாஹேஸ்வரர் ரக்ஷை||

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 16, 17-ஆம் நூற்றுண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | கிரந்தம் | முன் பதிப்பு : | — |
| அரசு : | நாயக்கர் | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 22 |

இடம் : சாரநாதர் கோயில்-அம்மன் சன்னதி-கருவறை தென்சுவரில் உள்ளது.

குறிப்புரை : ராயசம் நரசப்பய்யரின் மருமகன் வெங்கடேச(ன்) ஏதோ பணி செய்ததனைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 ராயசம் நர
2 சப்பய்யர்
3 மருமகன்
4 வெங்கடே
5 [சுராங்கத]
6 சேர்வை

த. நா. தொ. ஆய்வுத்துறை    தொடர் எண் : 126 / 1979

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 23 |

இடம் : சாரநாதர் கோயில்-குளத்தருகில் உள்ள நாலுகால் மண்டபப் படியில் உள்ளது.

குறிப்புரை : துண்டுக் கல்வெட்டுக்கள். நிலக் கொடையைக் குறிக்கும் கல்வெட்டுத்துண்டு களாக உள்ளன. அனைத்தும் கட்டிடத் திருப்பணியின்போது இடையிடையே வைத்துக் கட்டப்பட்டுள்ள துண்டுகள் ஆகும்.

கல்வெட்டு

I

1 . . . கையாலும் இயாவிட . . .
2 . . . பொலிசை நெல் முப்பதி . . .
3 . . . க்கு நெல்லு குறுணிக்கு நித்த . . .
4 . . . . ஒருதிரு நுந்தா விளக்கு சந்தி . . .
5 . . . . . கவும் எங்கள் பக்கல் விலையா . . .
6 . . . . ந்து புகுந்தார் இப்படி எரிக்க கடெ . . .
7 . . ம் திருமயானமுடையானை . . .
8 சிவப்பிராமணர் இவ்வனை . . . .

II

முன்மண்டபத்தில்

9 ங்க சோழ தேவர் . .
10 ல மசூ ஆக கடை . .
11 நிலம் கய இறை . .
12 கக்கு டைமாஙங . . .

## III

மேற்குப்புறப் பிரகாரத்தில், பாதம் பொறிக்கப்பட்ட மண்டபத்தில்

1 நாலுமா அரைகாணி டூா சந்ந. . . .

## IV

1 பெருமாள் மடமும் குளமும் . . யும் நிலம் செ . .

2 புல்லாலியுடையான் எழுத்து உ இவை புரவரி . . .

## V

1 லு . . . லம் . . . . முக்கா . . .

2 . . . . கு நிச்சயத்துடை . . . .

## VI

1 . . . . நிலத்துடையாத நிலம் . .

2 அனுபோகப்படி புன் பனை . .

## VII

1 மெ முக்காலே முந்திரிகை பெருக . . .

2 யூர்களில் கழிப்பது இவை புரவரி சீகாணி . . .

## VIII

1 நீங்கல்லாக நீக்கின . . .

2 டியா[ன] காசு முக்காலு . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 8, 9-ஆம் நூற்றுண்டு |
| ஊர் : | திருச்சேறை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | — |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | — | | |
| மன்னன் : | — | ஊர்க் கல்வெட்டு எண் | 24 |

இடம் : சாரநாதப் பெருமாள் கோயிலிலுள்ளது.

குறிப்புரை : இக்கோயிலில் உள்ள சேனைமுதலி செப்புத் திருமேனியின் பீடத்தில் இங்குள்ள எழுத்துக்கள் பொறிக்கப் பட்டுள்ளன. நாராயண தாஸன் என்பவர், இத்திருமேனியினை எடுப்பித்ததையும், இக்கோயிலில் திருச்சுற்றுமதிள் எடுத்ததையும் குறிக்கிறது. 8, 9-ஆம் நூற்றுண்டு எழுத்தமைதியிலிருப்பதால், இத்திருமேனியும் அக்காலத்தைச் சார்ந்ததெனத் துணிய முடிகிறது.

கல்வெட்டு

1 ஸ்ரீபட்டர் நாராயண தாஸன்

2 ஸேநாபதிகளையும் சுற்று மதிளும்

3 எடுப்பிச்சு . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 12-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திரைலோக்கி | | |
| மொழி : | தமிழ் | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 108 of 1931-32 |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | முதற்குலோத்துங்கன் | ஊர்க் கல்வெட்டு எண் | 1 |

இடம் : சுந்தரேஸ்வரர் கோயில் வெளிச்சுவர்-வாயிலின் தென்புறச் சுவரிலுள்ளது.

குறிப்புரை : கல்வெட்டின் முதலிலும், இறுதியிலும் ஒவ்வொரு வரியும் கட்டிடத்தினுள் சென்று விட்டது. இக்கோயில் இறைவனுக்குத் திருவிழாப்புறமாக விட்ட நிலத்தினை மகாசபையினர் இறையிலியாக்கியதைக் குறிக்கிறது. இந்நிலம், முன்னுளில் வரகுணப் பெருமாளால் அளிக்கப்பட்டது. இறைவன் கலியாணசுந்தரராக மார்கழித் திருவிழாவின்போது நகர்வலம் வருவதற்கும், பிற விழா, வழிபாடுகளுக்கும் அளிக்கப்பட்டது. மேலும், நாட்டுக்கும், ஊருக்கும் நன்மையாகும் பொருட்டு இத்திருவிழா எடுக்கப்பட்டதாகவும் குறிப்பிடப்படுகிறது.

கல்வெட்டு

1 [நிலமகணி]லவ மலர்மகள் புணர உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர ஏனை மன்ன[வரி ரியலுற்றுழி தர . . . .

2 . . . செய்து அவனி முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோவி ராஜகேஸரி பன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க . . . .

3 . . . த்து நாயற்றுக் கிழமையும் பஞ்சமியும் பெற்ற ஆயில்யத்து [நிந்ற பகல்] விருதராஜபயங்கர வளநாட்டு மண்ணி நாட்டு . . . .

4 . . . லூர் திருவாய்ப்பாடி ஆழ்வார் கோயிலில் திருவோலக்க மண்டபத்தே பெருங்குறி கொட்டி தந்[மி] செய்து கூட்டங்குறை . . .

5 . . . ஸூர தேவற்குத் திருவிழாப் புறமிட்ட பரிசாவது முந்பு வரகுணப் பெருமாள் இத்தேவற்கு ஆட்டாண்டுதோறும் மார்கழித் திங்கள் திருவிழா . . . .

6 . . . . சிற்றம்பலமுடையார் திருச்[சிந்]தாடல் எழுந்தருளி ஸ்ரீ
ப்ரதக்ஷிணம் பண்ணித் திருவோலக்கஞ் சேதருளுகைக்கும் இவ்வெழு நாளிலும் நா . . . .

7 . . . . [பணமொக்கும்] மற்றும் [ஸ]வ-ஃ உபசாரத்துக்கும் வேண்டுவந வற்றுக்கும் முந்பு ஸபையார் நம் பக்கல் வரகுணப் பெருமாள் பொந் குடுத்த . . . .

8 . . . ருளிவிக்கவும் இவ்வூர் ப்ராஹ்மணரையும் வெள்ளாளரையும் போ திட்டி நெற்கொண்டு எழுந்தருளிவித்துவராக நின்றமையில் இப் பரிசு எந்த . . .

9 . . . ங்க சோளதேவர் திருமேனி கல்லியாண திருமேனியாகவும் ஸ்ரீ க்ராமத்துக்கு நன்றாகவும் [ராஜ்ய]த்துக்கு நன்றாகவும் திருவிழா வெழுந்தருளுகைக்கு விட . . . . .

10 . . . ஞ்சாங் கண்ணுற்று எட்டாஞ் சதிரத்து நிலமுக்கால் இந்நிலமுக் காலும் இங்கே ஒந்பதாந் சதிரத்தும் பத்[தாஞ் சதிர]த்தும் ரூ ம உப ச இந்நில . . . . .

11 ஒந்றே இருமாவரையும் சந்திராதித்தவல் இறையிலியாகவிட்டு திருவுத் ஸகம் எழுந்தருளும் பத்து . . வெள்ளாளர் . . . . பண்ணே . .

12 . . . . நித்த . . . நாளுள் இடக்கடவனாகவும் இப்பரிசு ஸபா வ்யவஸ்தை பண்ணிநோம் ஸபையோம். இப்பரிசு ஸபையுளிருந்து . . . . .

13 . . . . மறச் . . . ட்டுதிருச்ச . . ஸஹஸ்ரந் பணியாலும் ஸ்ரீ சேரி நம்பூர் காடந்கள . . . அக்கசனம் ஸபா பணியாலும் சேரி ஆஸ்ரி ஸ . . . .

14 . . . . . . ஸ்ரீகூரஜ்ஜபுர தேவ ஸஹஸ்ரந் பணியாலும் [ஆலே சோலயார்] அக்கி [முனே] தில்லேவநமுடையாந் ஸஹஸ்ரந் . . . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | 4-ஆவது |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 1150 |
| ஊர் : | திரைலோக்கி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 103 of 1931-32 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | சோழர் | | |
| மன்னன் : | இரண்டாம் இராஜராஜன் | ஊர்க் கல்வெட்டு எண் | 2 |

இடம் : சுந்தரேஸ்வரர்கோயில் மகாமண்டபம் மேற்குப்புறச் சுவரில் உள்ளது.

குறிப்புரை : இரண்டாம் இராஜராஜனின் மெய்க்கீர்த்தி சொல்லப்பட்டுள்ளது. கல்வெட்டு இடையிடையே சிதைந்தும், முடிவு கிடைக்காமலும் உள்ளது. இம்மன்னனின் 3-ஆம் ஆட்சியாண்டின் 358 ஆவது நாளில் வந்த திருமுகப்படி, ஊரில் உள்ள பிரம்மதேயம், தேவதானம், பள்ளிச்சந்தம், சாலாபோகம், ராஜகுலவர் காணிப் பற்று ஆகியவைகளில் மூன்று வேலிக்கு மேலிருப்பவைகளை வரியிடுமாறும் இது போன்ற பிற வகைகள் செய்யுமாறும் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளைக் குறிக்கிறது.

கல்வெட்டு :

1 பூமருவிய பொழிலேழும் பொருப்பேழும் பு[னை] நித்திலத் [தாம] நெருங்குடை [பொ]ழிந்த தவள வெண்ணிலா [குளி]ர் பொழியச் சுடற் சக்கர வெற்பிற்றன்னடச்சக்கர வெயி லெறிப்பச் [சி]னப்புலியுஞ் செங்கோ[லுமனைத்துயிர்க்]

2 குங்காவல் பூணப் பணியணைமிசைப் பரஞ்சோதி பாற்கட[ல்] நின்றெழுந்தரு[ளி] மணி நெடுமுடி கவித்தனநென மண் மடந்தையைக் கைப்பிடித்து மண்மடந்தை மணியா[ர் மார் பில்]

3 [புகழ்] மடந்தை கொழுனனுகிப் போர் மடந்தையை மணம் புணர்ந்து சு[ரு]திகளிந் துறை வாழ்த்தப் பருதி முதற் குலம் விளக்கி விழுந்த வறுசமையத்தை மீளவெடுத்து ஆதி யுகங் கொழுந்து [விட்டுத் த]

4 மைத்தோங்க கோடாதறங் குளிர்தூங்க மாரிவாய்த்து வளம் சுரப்பத் தாரணி[ய]ார் பிணி நீங்க நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் தொழில் வளர எல்லாருந்தனித்தனியே வாழ்ந்தனம் மெனவும் வொருவரோடொருவற்

5 கும் வெருவெரு பகைமனத்தின்றி விழைந்து காதலு[ட]ன் சேர விந்தி[ர]ன் முதற் றிசாபால ரெண்மருமொரு[வடி][வாகி]* வந்தபடியென நின்று மனுவாணை தனிநடாத்தி மாலியானையே பிணிப்புண்பன மணிச்சிலம்பே யரற்[றுவ]ன சேலோடை[யே]

6 . . மாவே வடுப்படுவன மாமலரே [கொடியவாயின வருபுனலே] சிறைப்படுவன காவுகளே கொடியவாயின கள்ளுண்பன வண்டுகளே பொய்யுடையன வனவேயே போர் மலேவன வெழுகழனியே மை[ம]யுடையன நெடு . . . . . ந்திருநாட்டி [ல் இயல்]விதுவென நின்று க[ாவல்]நெறிபூண்டு

7 . . . . . ல்லோர்க்கு . . . . தாயரில்லோர் . . . கியும் மைந்த ரில்லார் மைந்த . . . விழிபெற்ற . . . . முகம்பெற்ற . . .

8 னென்னவும் வரஞ்செய் பெருந்தவ . . . . தமிழுக்குத் தலேவ னெனவு மூன்றுலகில் முதல்வனெனவும் [அரசி]யற்கை முந்நிறுத்தல்லவைக் கடிந்துப் பொருகலியிநிருள் நீக்கிப் புகழென்னும் நிலாப் பரப்பி கன்னடருங் காலிங்கருந் தென் னவருஞ் சி

9 ங்கையருங் கொங்கணருங் கூ[ப]கரும் போதகருங் கோசலருங் கப்பளரும் பாஞ்சாலரும் பொப்பளரும் பூலுவரும் மத்திரரு மராட்டரு வத்தவரு மாகதருங் கொடிநுடங்கு கனககோபுரக் கொ[ற்ற]வாசலில் வந்தீண்டி . . . . திறைகள் கைக் கொ[ண்டு]

10 . . . முடிசூடி பெண்ணரைசாய் . . ஞாலே மண்மிசைநடாத்துங் குயிலுலகுடை முக்கோக்கிழானடி யென்னுமலகில் கற்பில ரவிந்தமடந்தை[யுந் க]ருமாமுகில் திருநிறத்துக் கன[களப] ராஜராஜன் திருமார்பிலுந் திருத்தோளி[லும் திருமனதி]

11 லும் பிரியாது பற்றுர் குழலியர் கொரு சூளாமணி ரத்நமென்ன சிந்தாமணி மகாரத்நம் திலத சோழகுல . . . முதற்றேவியர் பல்லாண்டே . . . போற்றப் பேரரசை . . . தவர் கொழுனன் தலே காக்குமண்ணில் பொரு நாநமுதற் குல நான்[கும்] நல் லொழுக்கமும்

12 . . . . . . முழுதுடை . . . . . .

13 முழுதுடையாளும் . . . . புரக்குமருந்ததியெனவரும் பெருமை யவனிமுழுதுடையாளும் மந்னிய பெரும்புகழ் படைத்த தென்னவன் கிழானடி[களும்] வாழியூழி பலகர்பம் வாழி மணம் புணர்ந்திருப்ப உதயகிரி

14 உச்சியேறி மதிவெண்குடை புதுநீழற்கீழ்ச் சந்திரமுகமண்டலத்துத் தாமரைக்குள்ச் செம்பவளவா யிந்திரநீல குஞ்சரமோடிளம் பிடியோடைசந்தன செம்பொந்வீர ஸிங்ஙாஸன . . . . ச் . . . . . .

15 முக்கோக்கிழாநடிகளோடும் வீற்றிருந்தருளிய கோப்பரகேஸரி பன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு சுவது விருத[ராஜ]பயங்கர வளநாட்டு ப்ரஹ்மதேய[ங்]களிலும் தேவதா[னங்களிலும்] பள்ளிச் சந்தம் . . . . த் தொற்பட்டிறை இறை

16 . . . . . . . ஊர்களிலும் வெள்ளான் [உள்ளிட்ட] . . . . ட்டைத்த ஊராநிலும் இராஜகுலவர் காணிப்பற்றும் ஜீவிதம் பாக்கிறக . . . . . ம் மானவளாக . . . . நகா . . . . நாமு . . . . கெகுங்கூ . . . . . ள்ளிட்டு நெய்யும் நந . . . . ங்களு . . . . . .

17 . . . . . . . . ல . . . . . ணங்களில் . . . . களுக்குப் பதின் ஐநூறுவது . . . . ன்றுடை . . . . . . குதேவதானமிட்ட நிலங்கள் . . . . க்குத் தேவதான . . . . . பள்ளிச் சந்த . . . . . .

18 . . . . . யாரு வரிக்குக் கூறுசெய்வார்களும் மெழுத்திட்ட . . . . நீக்கி நின்ற நிலங்களுஞ் சாலா போகங்களும் . . . . மப்புறங்களும் மற்றும் ப . . . ணிப் புறங்களுக்கும் ஊர்க்கீழிறையிலியாய் வருகிற நிலங்களும் காணிகொள்வார்க்கு ராஜராஜப் பெருவிலையாக இளரி கீ[ழுடை]யாந் விற்றுக் காசொடுக்கக் கடவத

19 [ாக]வும் இந்நிலங்கள் மூவேலிக்கு மேற்பட்ட நிலங்களும் காணி கொ . . நா . . பாக்கீழ் வரியிலிடக்கடவதாகவு இந்நிலத்துக்கு இன்னும் நம் ஓலை எழுதும் சோளேந்திர சிங்க மூவேந்த வேளானும் வரிக்கு நாயகஞ் செய்வார்களில் சிறு புன்றூர் கிழவனும் மருதூருடையானும்

20 . . . யானும் விலை மதித்த காசு காணி விலையாக ஒடுக்கி இவர்களெழுத்திட்ட ஞாணம் கொண்டார்க்கு . . . . மாக அனுபவிக்கப் பண்ணுகவென்று திருமந்திரவோலை சோ

ளேந்திர சிங்க மூவேந்த வேளானெழுத விலாடராஜனு
வேளாயிராஜனும் தொண்டைமானும் எழுத்திட்டு மூன்று

21 [வது]நா[ள்] முன்னூற்றைம்பத்தெட்டினுல் ஹூஸாதஞ் செய்
தருளின ஸாமுதாயத்தாரு முக . . பட்டமையில் நாலாவது
கற்கடக நாயற்று வ௵வ ௨ பக்ஷத்து . . . யுஞ் செவ்வாய்க்
கிழமையும் பெற்ற அத்தத்தி நாள்

22 . . . களும் பழந்தேவதானங்களில் காணியான [இல்]லாதவர்
களும் இவையற்ற . . விலையாகக் கொண்டனுபவித்து
வருகிற நிலங்களும் ஊர்க்கீழிறையிலியாய் வரியிலிட்ட நிலங்
களும் இவை இற்றி . . . தானங்களில் முற்பாட்டுக் கமுகும்
திருநந்தவனங்களுமிந் திருமடை விளாகமு

23 . . . சாரி பாதன் பங்குந் தேவரடியார் பங்கும் பள்ளனயும்
நீக்கி நீக்கி நி . . . களும் குடிநீங்காத் தேவதானம் பள்ளிச்
சந்தம் மற்றும் இ . . த்திற . . . ஊர்களும் விஷ்ணு ஸ்தாநங்
களும் பதினேஞ்சாவது வரை ஊர்க்கீழிறையிலியான நிலத்
தில் மூன்றுவது நா . . .

| | | | |
|---|---|---|---|
| மாவட்டம் : | தஞ்சை | ஆட்சி ஆண்டு : | — |
| வட்டம் : | குடந்தை | வரலாற்று ஆண்டு : | கி.பி. 13-ஆம் நூற்றாண்டு |
| ஊர் : | திரைலோக்கி | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | 104 of 1931-32 |
| மொழி : | தமிழ் | | |
| எழுத்து : | தமிழ் | முன் பதிப்பு : | — |
| அரசு : | [சோழர்] | | |
| மன்னன் : | கோனேரின்மைகொண்டான் | ஊர்க் கல்வெட்டு எண் | 3 |

இடம் : சுந்தரேஸ்வரர் கோயில்-மகாமண்டபத் தென்புறச் சுவரிலுள்ளது.

குறிப்புரை : திருப்பரசுராமீஸ்வரமுடையாரின் திருக்காமக்கோட்டமுடைய நாச்சியாருக்கு வழிபாடு செய்யும் உரிமையினை, கோஸரி திரிபுவன சுப்பிரமணிய தக்ஷிணாமூர்த்தி பட்டன் என்பானுக்கு, மன்னனின் ஆணையின் பேரில் கொடுத்ததை இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. கல்வெட்டின் இறுதிப்பகுதி சிதைந்துவிட்டது.

கல்வெட்டு

1 ஸ்வஸ்தி ஸ்ரீ த்ரிபுவனசக்கரவத்தி கோனேரின்மை கொண்

2 டான் விருதராஜபயங்கர வளநாட்டுத் தயிலோக்கியான

3 விருதராஜபயங்கரச் சதுப்பேதி மங்கலத்துத் திருப்பர

4 சுராமீஸ்வரமுடையார் கோயில் தேவகன்மிக்கும் ஸ்ரீ

5 [மா]ஹேஸ்வரக் கண்காணி [செய்வார்களு]க்கும் ஸ்ரீகாரியஞ் செய்வா

6 னுக்கும் இக்கோயில் கொண்டரு . . . . மாக

7 திருக்கா[மக்] கோட்டமுடைய ஞ . . . . த்து

8 . . . உண்ணவும் இஞச்சியார் கோயில் ஶிவப்ராஹ்மணர் காணி . . . . பது பட்ட

9 கோஸரி த்ரிபுவந ஸுப்ரமணிய தக்ஷிணாமூத்தி பட்டன் என்கிற அ . . . னுக்கு காணியாக மேற் . . . .

10 கடவதாகவும் பெறவேணுமென்று பணித்த சக்கரவத்தி நமுக்குச் சொன்னமையிற் இப்படி சயு . . .

